# ஸ்ரீ சிருங்கேரி சங்கராசார்ய மஹாஸ்வாமிகளின் அருளுரை

21-5

தொகுப்பு - 10

# எது தர்மம்?



வெளியிடுவோர் :

ஸ்ரீ சாரதா ட்ரஸ்ட்

தெரு, சிருங்கேரி - 577 139.

[ விலை ரூ. 1-60

Copies can be had from :

The Publication Manager,
Sri Sharada Trust,
(Madras Office)
Sri Sringeri Math Buildings,
No. 11, Venkatanarayana Road,
Madras - 600 017.

Phone : 442041

Printed at :
Mercury Printers,
82, Bazaar Road, Madras - 4. Phone : 74097

ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ மஹாசன்னிதானம்

21-5

# மு ன் னு ரை

இந்நூலில் கண்டுள்ள அருளுரை ஸ்ரீ மஹாஸன்னிதானம் 1980ஆம் ஆண்டு மதுரை மாநகரில் அருளிய உபதேசமாகும் தர்மம் என்றால் என்ன என்பதைப்பற்றியும், எத்தகைய தர்மம் யாரால் செய்யப்படவேண்டும் என்பதைப்பற்றியும் ஸ்ரீமத் ஆசார்யாள் அழகாக எடுத்துக் கூறியுள்ளார்கள். ஸ்ரீ சாரதா டிரஸ்ட் வெளியிடும் 'ஆச்சார்யாளின் அருளுரை'களில் 10-வது தொகுப்பாக இது விளங்குகிறது. இப்புத்தகத்தை தொகுக்க திருவாளர்கள் கோ. இராமசுப்ரமணியமும், பு. நா. நீலகண்டனும் உதவியுள்ளனர்.

இப்படிக்கு,

இரா. மு. உமேஷ்,

ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு

சங்கராசார்ய மஹாஸ்வாமிகளின்

பத்திரிகைச் செயலாளர்.

பெங்களூர்,

15 – 11 – 83.

# எது தர்மம் ?

கங்காபூரப்ரசலிதஜடாச்ரஸ்தபோகீந்த்ரபீதாம்
ஆலிங்கந்தீம் அசலதனயாம் ஸஸ்மிதம் வீக்ஷமாண: ।
லீலாபாங்கை: ப்ரணதஜனதாம் நந்தயம்ச்சந்த்ரமௌளி :
மோஹத்வாந்தம் ஹரதுபரமானந்தமூர்த்திச்சிவோன: ॥

எது தர்மம் எது அதர்மம் என்று தெரிந்து கொள்வதற்கு ஜனங்களுக்கு விருப்பம் உள்ளது. சில பொருட்களை நாம் நம் கண்களால் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். சிலபொருட்களை நாம் கண்களால் பார்த்துத் தெரிந்து கொள்ள முடியாது. ஆபஸ்தம்பர்,

'ந தர்மாதர்மௌ சரத: ஆவாம்ஸ்வ இதி'

என்று கூறுவதுபோல் தர்மமும் அதர்மமும் தத்தம் பெயர்களைக் கூறிக்கொண்டு வெளியில் வந்து சுற்றுவது கிடையாது. ஏனென்றால்

'கேசிதன்யம் தர்மமாஹு: கேசிதன்யம்'

என்று கூறப்பட்டிருப்பதுபோல் ஒருவன் ஒரு செயலைத் தர்மம் என்றால் இன்னொருவன் இன்னொன்றைத் தர்மம் என்று சொல்வான். ஆகவே எது தர்மம், எது அதர்மம் என்று தீர்மானிப்பதற்கு நமக்கு ஒரு ஸாதனம் தேவையாக உள்ளது.

தர்மமும் அதர்மமும் உண்டா என்றே சிலருக்கு சந்தேகம் வரலாம். நாம் செய்த கர்மாவிற்கு பலன் உண்டு என்றால் அப்போது தர்மமும் உண்டு என்றே பொருள். செய்த கர்மாவிற்குப் பலன் இல்லையென்றால் அப்போது தர்மமும் இல்லை என்றே ஆகிவிடும். ஆனால் மனிதர்கள் 'இந்த கர்மாவிற்கு இந்தப் பலனுண்டு' என்று கருதித்தான் கர்மாக்களைச் செய்கிறார்கள். ஒருவன் ஐ. ஏ. எஸ். தேர்வை எழுதி அதில் வெற்றி பெற்றான் என்றால் அந்தச் செயலுக்கான

பலன் அவனுக்கு அப்போதே கிடைத்துவிட்டது. ஒரு கத்தியினுல் கையை வெட்டிக் கொண்டால் ரத்தம் வருகிறது. இதுவும் உடனே பலனைத் தரும் செயல்.

'ஸந்த்யாவந்தனம் செய்கிருமே! அதற்கு என்ன பலன்?' என்று சிலர் கேட்கலாம். இதன் பலனை உடனே தீர்மானம் செய்ய முடியாது. ஆனுல் அது ஒருபோதும் வ்யர்த்தமில்லை. ஒரு செயலைத் தர்மம் என்று சொல்பவர் அச்செயலுக்கான பலனையும் ப்ரர்ப்பவராய் இருக்க வேண்டும். பலனைப் பார்க்காதவர், ஒரு செயலைத் தர்மம் என்று கூற முடியாது. ஸந்த்யாவந்தனம் செய்வதைத் தர்மம் என்று ஒருவர் கூறுவதற்கு அதனுடைய பலனையும் பார்த்திருந்தால்தான் முடியும். அவர் ஸந்த்யாவந்தனம் செய்யப்படுவதையும் அதன் பிறகு அதற்குப் பலன் அனுபவிக்கப்படுவதையும் பார்த்திருக்க வேண்டும். நம்மால் இவ்வாறெல்லாம் செய்ய முடியாது. இன்று நாம் தர்மம் செய்வோம். நாளை நாம் எங்கிருப்போம் என்று நம்மால் கூற முடியாது. ஆகவே மனிதர்களால் தர்ம அதர்மங்களைத் தீர்மானிக்க முடியாது என்பது தெளிவாகும்.

தர்ம, அதர்மங்களைத் தீர்மானிக்கத் தகுதியுள்ளவன் ஈச்வரன்தான். ஈச்வரனுடைய வாக்யம் ஒன்றுதான் இவ் விஷயத்தில் பிரமாணம். செயலையும், பலனையும், செய்தவனையும் பார்த்துக் கொண்டிருக்கும் ஈச்வரன் தான் 'இந்தச் செயலுக்கு இந்தப் பலன்' என்று கூறமுடியும். ஒன்றையும் பார்க்காத நாம் தர்மத்தைத் தீர்மானிக்க முடியாது.

ஈச்வரனுடைய வாக்யம் என்ருல் என்ன?

ச்ருதிஸ்து வேதோ விக்ஞேய: தர்மசாஸ்த்ரம் து வை
ஸ்ம்ருதி: ।

தே ஸர்வார்த்தேஸ்வமீமாம்ஸ்யே தாப்யாம்
தர்மௌ விநிர்பபௌ ॥

ஈச்வரனுடைய வாக்யங்களாக உள்ள வேதம் அல்லது ச்ருதி ஏவற்றையெல்லாம் நம்மைச் செய்யுமாறு சொல்கின்றதோ

அவையனைத்தும் தர்மம் ஆகும். "ஈச்வரனை நான் பார்த்ததே கிடையாது. அப்படியிருக்கையில் அவனுடைய வாக்யமாக வேதத்தைக் கூறி, அசேதனமாய் (சைதன்யம் இல்லாது) இருக்கக்கூடிய வேதத்தையே பிரமாணம் என்றும் கூறு கிறீர்கள். இதை எப்படி நான் நம்புவது?" என்று சிலர் சந்தேகம் எழுப்பலாம்.

இதற்குப் பதிலை நாம் ஆராயுமுன்னர் ஒரு விஷயத்தைக் கவனிக்கவேண்டும். உலகத்தில் எவ்வாறு நம்மை வழிநடத்த சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றனவோ அதேபோல்தான் சாஸ்திரங்களில் உள்ள சட்டங்களும் இருக்கின்றன. உலகத் திற்குப் பொருந்தாவண்ணம் சாஸ்திரங்கள் எந்த விதியையும் கூறுவதில்லை.

ஒருவன் ஒரு 'கார்' ஓட்டிக்கொண்டிருக்கிறான். ஆனால் அவன் காரை, சாலையில் ஓட்டுவதற்குப் பதில் நடைபாதையில் ஓட்டிக் கொண்டிருக்கிறான். அதே சமயம் ஒரு மனிதன் இன் னொரு இடத்தில், நடைபாதையில் நடக்காமல் நடுத்தெருவில் நடந்து போகிறான். இதில் எதுசரி? எது தவறு? என்று கேட்டால் காரை நடைபாதையில் செலுத்துவதும் தவறு; மனிதன் நடுத் தெருவில் நடப்பதும் தவறு. 'நாங்கள் எல்லோரும் பணம் கொடுத்துத்தானே அரசாங்கம் சாலைகளை அமைத்திருக்கிறது! ஆகவே நடுத்தெருவில் நடப்பதற்கும், காரை நடைபாதையில் ஓட்டுவதற்கும் எங்களுக்கு இடமில்லையா?' என்று கேட்டால் அப்படிப்பட்டவர்கள் விபத்தில் சிக்கி இறக்கவேண்டியதுதான்.

சட்டப் புத்தகம் சாலை விதிகளையெல்லாம் வகுத்துத் தந் துள்ளது. 'மனிதர்கள் நடைபாதையில்தான் நடந்து செல்ல வேண்டும். வாகனங்கள் சாலையில்தான் செல்லவேண்டும். மேலும் எல்லோரும் இடதுபக்கத்திலேயே செல்லவேண்டும்.' என்று சாலை விதிகள் கூறுகின்றன.

சட்டப் புத்தகத்தை யார் எழுதினார்கள் என்று தனக்குத் தெரியாது என்று குற்றவாளி கூறினால் நீதிபதி அவனை விட

மாட்டார். ஏனென்றால் சட்டப் புத்தகத்தை இயற்றியவரை நாம் பார்க்க வேண்டியதில்லை. ஆனாலும் நாம் சட்டப் பிரகாரம் நடக்க வேண்டும். அதை யார் எழுதி வைத்திருந்தாலும் நீதிபதி அதில் உள்ளவற்றை வைத்துக்கொண்டு தீர்ப்பு வழங்குவார். இதுபோல தர்ம சாஸ்திரங்களை யார் இயற்றினார்கள் என்பதே தெரியவில்லை, அவர்களை நாம் பார்த்ததில்லை என்று யாராவது சொல்லுவார்களேயானால் அவர்களுக்கு மேற்கூறிய உதாரணமே பதிலாக அமையும். தர்ம சாஸ்திரங்களில் கூறப்பட்டவைகளின்படி நடப்பதுதான் நமது கடமையே தவிர அவற்றைத் தீர்மானிப்பது நம் உரிமையல்ல.

இன்னொரு முக்கியமான பிரச்னையை இப்போது ஆராய்வோம். தர்ம சாஸ்திர நூல்களெல்லாம் தேவையா ? நாம் இவற்றை ஏன் ஆதாரமாக வைத்துக் கொள்ள வேண்டும் ? இக்கேள்விகளுக்கு விடைபகரும் உதாரணம் ஒன்றை இப்போது பார்ப்போம். உலகத்தில் நாம் அனைவரும் பின்பற்றுவதற்காகச் சட்டப் புத்தகத்தை வைத்துள்ளார்கள். சட்டப் புத்தகம் என்ற ஒன்றே இல்லாவிடில் திருடன் ஒருவன், தான் செய்யும் திருட்டுத் தொழில் மிகவும் நியாயமானதுதான் என்று வாதாடுவான். 'நான் சாதாரணமாகத் திருடுவதில்லை, அப்படியே திருடினாலும் பெரிய பணக்காரர்களிடமிருந்துதான் திருடுகிறேன். இத்தகைய பணக்காரர்கள் நிறைய அளவிற்குக் கறுப்புப் பணம் வைத்திருக்கிறார்கள். அரசாங்கமே இவற்றைக் கண்டுபிடிக்க முடியாத சமயத்தில் நான் திருடிய ரூ 60[illegible] ஒரு தவறல்ல. மேலும் நான் திருடாமலிருந்தால் என் வீட்டில் எல்லோருக்கும் உணவு கூட இருக்காது' என்றெல்லாம் திருடன் கூறுவான். ஆக, திருடுதல் அவனைப் பொருத்த மட்டில் மிகவும் உத்தமமான செயல் என்று காட்டுவான்.

ஒரு குடிகாரன் குடிப்பழக்கம் மிகவும் நல்லது என்று வாதாடுவான். ஒவ்வொருவரும் தத்தம் ஸம்ஸ்காரங்களுக்கேற்றவாறு தம்முடைய செயல்களை உயர்த்திக் கூறுவர். ஆக, ஒருவர் ஒரு

செயலைச் செய்வது சரி என்று கூறினால் பலர் அதைச் செய்வது தவறு என்பர். அதேபோல் ஒருவன் தவறு என்று கூறும் செயலைப் பலரும் ஆமோதிப்பர். இதனால் சண்டையும் குழப்பமும் தான் நாட்டில் நிலவுமே தவிர அமைதிக்கு இடமில்லை. இதனால்தான் சட்டப் புத்தகம் என்ற ஒன்று அமைக்கப்பட்டு எந்தச் செயல்களைச் செய்தால் தவறு என்று அதில் எழுதி வைக்கப்பட்டிருக்கிறது. இதே காரணத்தை நாம் தர்ம சாஸ்திரங்களின் விஷயத்திலும் ஏற்றுக் கொள்ளலாம். ஆகவே தர்ம சாஸ்திரங்கள் மிகவும் இன்றியமையாதவை என்பது நமக்கு விளங்கும்.

நாம் பொதுவாக மக்களை இரு வகையாகப் பிரிக்கலாம். முதல்வகை ஆஸ்திகர்கள். அடுத்த வகை நாஸ்திகர்கள். கடவுள் இருக்கிறார் ; பரலோகம் இருக்கிறது, புண்ய பாவங்கள் உண்டு என்றெல்லாம் நம்புபவன் ஆஸ்திகன். இவையெல்லாம் இல்லை என்று சொல்பவன் நாஸ்திகன். பகவானைப் பற்றி வரும் சுலோகம் ஒன்று,

'யோ மே கர்பகதஸ்யாபிவ்ருத்திம் கல்பிதவான் ப்ரபு:'

என்று கூறுகிறது. பகவானுடைய விசித்திரமான லீலைகள் எண்ணற்றவை. தாயின் வயிற்றில் குழந்தையாக இருக்கும் போது வயிற்றுக்குள்ளேயே இவனுக்கும் ஆகாரம் ஆகிவிடுகிறது. குழந்தை பிறந்தவுடன் தாய் பாலூட்டிவிடுவதினால் அப்போதும் குழந்தையின் வயிறு நிரம்புகிறது. எந்தெந்தச் செயலை எப்படியெல்லாம் நிகழ்த்த வேண்டும் என்பதை ஈச்வரன் முன்னரேயே தீர்மானித்திருந்திருக்கிறான் இதனால்தான்

ஸஹ யக்ஞா: ப்ரஜா ஸ்ருஷ்ட்வா புரோவாச
ப்ரஜாபதி: ।
அனேன ப்ரஸவிஷ்யத்வ மேஷவோஸ்த்விஷ்டகாமதுக் ॥

என்று கூறப்பட்டுள்ளது. இறைவன் உலகத்தை ச்ருஷ்டி செய்ததோடு நிறுத்திக் கொள்ளாமல் உலகத்தின் பரிபாலனத்

திற்காக வேதங்களையும் அப்போதே உபதேசித்து விட்டான். மனிதன் எப்படியெல்லாம் வாழ்க்கை நடத்தினால் சுகமாக வாழ முடியும் என்பதற்கான ஸாதனங்களையும் அப்போதே அளித் தான் இறைவன். அதனால்தான்

அனேன ப்ரஸவிஷ்யத்வமேஷவோஸ்த்விஷ்டகாமதுக் ||

என்று கூறப்பட்டிருக்கிறது. யக்ஞங்கள் போன்றவற்றில் நாம் கொடுக்கும் 'ஹவிஸ்ஸை' வைத்துக்கொண்டு தேவதைகள் ஜீவிக்கிறார்கள். அதன் பயனாக தேவர்கள் தரும் மழை போன்ற இயற்கை வசதிகளை வைத்துக்கொண்டு மனிதர்கள் வாழ்கிறார் கள். ஆக ஒருவருக்கொருவர் உதவி புரிந்து சுக வாழ்வு வாழ முடியும். இத்தகைய ஸாதனங்களை இறைவன் ச்ருஷ்டியின் ஆரம்பத்திலேயே உபதேசித்துவிட்டான்.

சிலருக்கு ஒரு சந்தேகம் வரும். "உலகில் நாஸ்திக ராஜ் யங்கள் எவ்வளவு இருக்கின்றன ! அங்கும் தவறாது மழை பெய்து கொண்டிருக்கிறதே ! சொல்லப் போனால் நமக்குத் தான் மழை பொய்த்துப் போகிறதே தவிர தேவதைகளை ஆராதிக்காத அவர்களுக்குக் காலத்தில் மழை பெய்கிறது." இந்தச் சந்தேகம் மிகவும் சுவாரசியமானது. இதற்கான சமா தானத்தைப் பின்வருமாறு கொடுக்கலாம்.

ஒருவன் சகல ஐச்வர்யங்களையும் பெற்றிருக்கிறான். ஆனால் அவனுக்கு எப்போதும் ஏதாவது ஒரு விதமான பயம் மனதை அரித்துக் கொண்டேயிருக்கிறது. இன்னொரு மனிதன், தனக்கு உணவிற்கு எவ்வளவு தேவையோ அவற்றை மட்டுமே வைத் துக்கொண்டிருக்கிறான். இந்த இரண்டு பேர்களில் யார் மிகவும் சுகமானவன் என்றால் பயமே இல்லாமல் தன் வாழ் நாளை நிம்மதியாகக் கழிப்பவன்தான் மிகவும் சுகமானவன்.

அதேபோல் வேறு நாடுகளில் ஐச்வர்யங்கள் நிறைந்திருந் தாலும் அவர்கள் ஒரு நாளில் படும் கஷ்டத்தை நாம் நூறு வருடங்களில்கூட படமாட்டோம். அவர்கள் தலைக்குமேல்

எப்போதும் குண்டு போட்டுக் கொண்டேயிருக்கிறார்கள். நம்மிடம் இப்பேற்பட்ட ஆபத்துக்கள் இல்லாமலிருப்பதற்குக் காரணம் நமக்கு உள்ள ஈச்வர சிந்தனையும், தர்மத்தில் உள்ள பற்றும்தான்.

முன்பே நாம் கூறியதுபோல் லோகத்வயங்களையும் (இவ்வுலகத்தையும், மறு உலகத்தையும்) பார்க்கிற இறைவன்தான் தர்மத்தைத் தீர்மானம் செய்ய முடியும். அடுத்த பிறவி இருக்கிறது என்றால்தான் லோகத்வயம் இருக்கிறது என்று பொருள். சிலருக்கு மறுபிறவி உண்டா என்பதிலேயே சந்தேகம் உண்டு. மறுபிறவி உண்டு என்பதை விளக்கப் பல யுக்திகள் இருக்கின்றன. ஒரு மனிதன் பிறக்கும்போதே பரமபாக்கியசாலியாகப் பிறக்கிறான். இன்னொருவன் பிறந்ததிலிருந்தே சாப்பிடக்கூட ஒன்றும் கிடைக்காத நிலையில் அவதியுறுகிறான். இதற்கெல்லாம் காரணமான முன்பிறவியொன்று இருந்தது என்றும் அதில் செய்யப்பட்ட புண்ய பாவச் செயல்கள்தாம் இப்போது ஒருவனுக்கு சுகத்தையும் துக்கத்தையும் தருகின்றன என்பதும் ஒப்புக்கொள்ளப்பட வேண்டிய விஷயங்கள். மறுபிறவி இருக்கிறதென்று காட்டும் சுலோகம் ஒன்று,

''கச்சித்துக்கீ ஸ்வஜன்மப்ரப்ருதி சுகயுத: சாபர:
கஸ்ய ஹேதோ:
கஸ்மாதாத்யா ப்ரவ்ருத்திஸ்தனுரபி ச குத;
கிம் ந வேத்தி ப்ரமீத: ।
ஸ்வாபாவ்யம் ஹேதுஸாம்யே ஸமமிதிவிதிதம்
தீபபீஜாங்குராதேள
வைஷம்யம் கர்மஜன்யம் யதி கதஸி ஜனே:
பூர்வமப்யாத்மஸித்தி: ॥ ''

(ஒருவன் பிறப்பிலிருந்தே துன்பத்தை அனுபவிக்கிறான். மற்றொருவன் இன்பத்துடனிருக்கிறான். இதற்குக் காரணம் என்ன? முதல் செயல் எப்படி? உடலும் எப்படி? செத்தபின்



ஏன் அறிவதில்லை? தீபம், விதை, முளை முதலியவைகளில் காரணங்கள் ஸமமாக இருந்தால், ஸ்வபாவமும் சமம் என்கிற நியமமும் ஏற்படுகிறது.)

இவ்வாறுள்ளது. பிறந்தவுடன் குழந்தைக்கு அழவேண்டும் என்று எப்படித் தெரிந்தது? அழுதால் தனக்குப் பால் தருவார்கள் என்பது அக்குழந்தைக்கு எப்படித் தெரிந்தது? பால் தரப்படாவிட்டால் அதற்கு ஏதோ கஷ்டம் ஏற்பட்டு மீண்டும் கத்துகிறது. இதற்கெல்லாம் காரணம் சொல்லவேண்டுமென்றால், நாம் 'முன்பிறவி' என்ற ஒன்றையும், அப்போது ஏற்பட்ட அனுபவங்களின் ஸம்ஸ்காரங்கள்தான் தற்போது குழந்தைக்கு ஏற்பட்டது என்பதையும் ஒப்புக் கொள்ள வேண்டும். ஜன்மாந்தரத்தில் ஏற்பட்டிருந்த ஒவ்வொரு ஸம்ஸ்காரமும் தற்போது தக்கசமயத்தில் தோன்றி ஒருவனுக்குச் செயல்களில் பிரவிருத்தி ஏற்படுமாறு செய்யும். யார் உலகத்தை ச்ருஷ்டி செய்து ஜன்மாந்திரங்களையும் பார்த்துக் கொண்டிருக்கிறாரோ அவர்தான் தர்மம் எது அதர்மம் எது என்ற தீர்மானத்தை நமக்கெல்லாம் வகுத்துத் தர வேண்டும். அப்பேற்பட்டவர்,

ஸ தேவ : பரமோ ஞாதா ஸத்யஞானாதிலக்ஷண : I

என்று கூறப்பட்டிருப்பதுபோலுள்ள இறைவனேயாவார்.

பகவான் முதலில், தானே தர்மங்களை உபதேசித்து விட்டான். பின் எதற்காக ரிஷிகள் தர்ம சாஸ்திரங்களை எழுதி வைத்தனர்? இந்தக் கேள்விக்கு விடையளிக்கிறது நீலகண்ட தீக்ஷிதரின் ஒரு ச்லோகம்.

தேனைவோக்தம் நிகமவசஸா போதனீயா ஸ்துஜீவா: I

ஜீவைரேவேத்யபி ச முனிபி: காரிதம் தர்மசாஸ்த்ரம் II

ஜனங்களுக்கு மனதில் என்ன எண்ணம் இருக்குமென்றால், "பகவான் பரமசிவன் தனது நிலைக்குத் தகுந்தாற்போல்

தர்மங்களை உபதேசித்துவிட்டான். ஆனால் நம்மால் அவற்றை யெல்லாம் கடைப்பிடிக்கமுடியாது. ஆகவே அவனே அதில் சொல்லப்பட்டவற்றையெல்லாம் செய்யட்டும்'' என்று சிலருக்கு எண்ணம் ஏற்படலாம். அதனால் மனிதர்களிலேயே ரிஷிகளாக யிருந்த மஹான்கள், ஈச்வரனின் ப்ரேரணையினால் தர்ம சாஸ் திரங்களை எழுதினர். இதன் காரணமாக ஜனங்களுக்கு தர்ம சாஸ்திரங்களின்மேலுள்ள விச்வாசம் மேலும் அதிகமாக வாய்ப் பிருக்கிறது. ஆகவேதான் ரிஷிகளும் இறைவனின் வேதங் களைப் பின்பற்றி தர்ம சாஸ்திரப் புத்தகங்களை எழுதினர்.

தற்போது பலருக்கும் ஓர் ஆசை. எல்லோருக்கும் எவ்வித வேறுபாடின்றி ஒரே விதமாகத் தர்மங்கள் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டால் நன்றாக இருக்கும் என்பதுதான் அந்த ஆசை,

எல்லோருக்கும் ஒரேவிதமான ஆடைகளைக் கொடுத்து உடுத்திக்கொள்ளச் சொன்னால் அது முடிகிற காரியமா? அப்படி ஒருவேளை நடந்தால் ஒரு போலீஸ்காரனும் காவியுடை அணிந்திருப்பான்; ஒரு ஸந்யாசியும் காவியுடை அணிந் திருப்பான். ஏதேனும் திருட்டுத்தனம் நடந்தால் ஜனங்கள் அந்த 'நிஜ' ஸந்யாசியிடம் முறையிடுவார்களா அல்லது 'போலீஸ்கார' ஸந்யாசியிடம் முறையிடுவார்களா? ஆகவே உலகத்தில் காரியங்கள் சரிவர இயங்க வேண்டுமென்றால் மிகவும் சாதாரண விஷயமான துணிகளைக்கூட நாம் எல்லோ ருக்கும் ஒரே மாதிரி கொடுக்கமுடியாது. ஹிந்துக்களுக்கு என்று ஒரு சட்டம் இயற்றியிருக்கிறார்கள். அந்தச் சட்டத்தைப் பின்பற்றுமாறு நாம் அனைவரையும் கூற முடியுமா? முடியவே முடியாது. சிறு உலக விஷயங்களிலேயே நிலைமை இவ்வாறி ருக்கும்போது மிக நுட்பமான தர்ம சாஸ்திரங்கள், எல்லா ஜனங்களுக்கும் ஒரே மாதிரியான தர்மங்களைச் சொல்ல வேண்டும் என்று எதிர்பார்ப்பது நியாயமேயாகாது.

நம்முடைய சாஸ்திரங்கள் ஏதோ இப்போதுதான் புதிதாக வந்ததல்ல. மேலும் அவை ஏதோ சில புத்திசாலிகள் சேர்ந்து

யோசனை செய்து எழுதப்பட்டவையல்ல. பரம்பரையாக தர்மம் வந்து கொண்டிருக்கிறபடியால் இப்போது நாம் ஏதாவது மாறுதல்கள் ஏற்படுத்தி எல்லோருக்கும் எல்லா தர்மங்களும் சமம் என்று கூற முடியாது,

ப்ரஹ்மசாரியாயுள்ளவனுக்கு இந்த்ரிய நிக்ரஹம் (புலன்களை அடக்குதல்) என்பது தர்மமாகும். அதே சமயம் க்ருஹஸ்தனுக்கு ஸம்பூர்ண இந்த்ரிய நிக்ரஹம் தர்மமல்ல. ஏனென்றால் 'ஸந்ததி' வேண்டும் என்பதற்காகக் கல்யாணம் செய்து கொண்டுள்ளான். ஸந்யாஸியாய் இருப்பவன் இவ்விஷயத்தை மனதினால் சிந்திப்பதும் மஹாபாவம். ஏனென்றால் ஸந்யாஸம் வாங்கும்போது எல்லாவற்றையும் துறந்துவிடுவதாகப் பிரதிக்ஞை செய்திருக்கிறான். இப்படியெல்லாம் இந்த்ரியங்களை அடக்கியும், மனதில் சபலங்கள் தீராமலிருந்தால் பகவான்,

"கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன் |
இந்த்ரியார்தான்விமூடாத்மா மித்யாசார : ஸ உச்யதே ||"

அப்படிப்பட்டவனுக்கு 'மித்யாசாரி' என்ற பட்டம் கொடுத்துள்ளான்.

ஆனால் எல்லோருக்கும் பொதுவாக உள்ள சாமான்ய தர்மங்கள் இருக்கவே இருக்கின்றன.

அஹிம்ஸா ஸத்யமஸ்தேயம் சௌசமிந்த்ரியநிக்ரஹ : |
ஏதம் ஸாமாஸிகம் தர்மம்.
சாதுர்வர்ண்யே s ப்ரவீன் மனு : ||

உலகத்தில் பிறந்த எல்லோருக்கும் பொதுவான ஒரு விஷயம் உடை உடுப்பது என்பது. ஆனால் ஒருவன் போலீஸ்காரனாக இருந்தால் அவனுக்கு ஒரு வகையான உடுப்பு, அவன் ஸந்யாஸியாக இருந்தால் வேறு வகையான ஆடை என்றெல்

லாம் உள்ளன உடை உடுத்தல் என்பது பொதுவான தாலும் உடுத்தும் உடைகளில் வித்யாசங்கள் நிறைய உண்டு

இதேபோல் அஹிம்சை அல்லது 'பிற உயிர்க்குத் தீங்கிழைக்காமை' என்பது மிகப் பெரிய (சாமான்ய) தர்மம். இந்த தர்மத்தை உலகத்தில் பிறந்த ஒவ்வொருவனும் அனுஸரிக்க வேண்டும்.

"அஹிம்ஸா ஸர்வபூதானி' (எல்லா உயிர்களிடத்தும் அஹிம்ஸையுடனிருத்தல்) என்பது மிகப் பெரிய தர்மம்.

ஆனால் மருத்துவர், இதற்கு விதிவிலக்காக இருக்கலாம். நோயாளியின் வயிற்றை அறுத்துச் சிகிச்சை செய்ய மருத்துவருக்கு உரிமை உண்டு. ஏனென்றால் அவர் வாங்கியுள்ள பட்டம் அவருக்கு அந்த உரிமையை அளித்துள்ளது. அவ்வாறு ஒரு பட்டத்தை நாமும் வாங்கிவிட்டால் நோயாளியின் வயிற்றை அறுத்துப் பார்க்க நமக்கும் உரிமை உண்டு. வருபவன் நோயாளியாக இருந்து அவனுக்கு அறுவை சிகிச்சை தேவையானால்தான் அவனுடைய வயிற்றை மருத்துவர் அறுத்துப் பார்க்கலாம் இல்லாவிட்டால் அதுவும் கூடாது எந்தவித தேவையுமில்லாமல் டாக்டர் ஒருவனது வயிற்றை அறுத்தால் அவர் மீது கொலைக் குற்றம் சாட்டி அவரை சிறைக்கு அழைத்துச் சென்றுவிடுவர்

அஹிம்ஸையைப்பற்றிப் பார்க்கும்போது நாம் 'கோபம்' என்னும் விஷயத்தைச் சற்றே நோக்கவேண்டும். மனிதனுடைய பெரிய எதிரி கோபமாகும். சிலர் கோபம் வந்தபின் தாங்கள் செய்யக்கூடாது என்று முன்பு நினைத்திருந்த செயல்களையும் தற்போது செய்துவிட்டுப் பின் அதற்காகப் பச்சாத்தாபப்படுவார்கள். இதனால் எந்த விதமான பிரயோஜனமுமில்லை. ஆகவே நாம், நம்முடைய மனதை எப்போதும் நம் வசத்திலேயே வைத்துக்கொண்டிருக்க வேண்டும். ஆனால்

கோபம் வரவேண்டிய காலத்தில் யாருக்கு அது தேவையோ அவர்களுக்குக் கோபம் வரவேண்டும். போருக்குச் சென்றுள்ள வீரன் போர்க்களத்தில், 'எதிரி என்ன செய்தாலும் நான் பொறுமையோடிருப்பேன். எனக்குக் கோபமே வராது' என்று கூறினால் அந்த வீரனால் எதிரியைத் திருப்பித் தாக்கமுடியாது. மாறாக எதிரிதான் அவனை எளிதில் வீழ்த்திவிடுவான். ஆகவே சில சமயங்களில் சிலருக்குக் கோபம் வந்தாலும் அதனால் தவறில்லை என்பது நமக்குத் தெளிவாகும்.

'அஹிம்ஸா பரமோ தர்ம.' என்று கூறப்பட்டிருப்பதால் யக்ஞங்கள் செய்யக்கூடாது என்று பொருளில்லை.

காளிதாஸன் ஓரிடத்தில்,

ஸஹஜ'ம் கில யத்விநிந்திதம் ந கலு தத்கர்ம
விவர்ஜநீயம் |

பசுமாரணகர்மதாருணோனுகம்பாம்ருதுரேவம்
ச்ரோத்ரிய: ||

என்று கூறியுள்ளார். அதாவது யாகத்தில் ப்ராஹ்மணன் வதம் செய்வது தவறல்ல என்பதை ஒரு மீனவன் வாயாலேயே சொல்லவைத்திருக்கிறான் காளிதாஸன். அதே சமயம் அந்த ப்ராஹ்மணன் மீன் பிடித்தலில் இறங்கினால் அது தவறுதான். ஸன்யாஸிகளின் விஷயத்தில்,

ஏதத் ச்ரேயோ யேऽபிநந்தந்தி மூடா:
ப்லவா ஹ்யேதேऽத்ருடா: யக்ஞரூபா:

என்று கூறப்பட்டிருப்பதால், ஸந்யாஸிகள் யக்ஞத்தில் வதை செய்வது அவர்களைப் பொருத்தவரையில் நிஷித்தகர்மா (தடுக்கப்பட்ட செயலாக) ஆகிவிடுகிறது.

அஹிம்ஸை விஷயத்தில் நாம் இன்னொன்றை நினைவு கூறவேண்டும்,

பரோபகார: புண்யாய பாபாய பரபீடனம்

(அடுத்தவருக்கு உபகாரம் செய்வது புண்யம் தரும், அடுத்தவர்களை இம்சிப்பது பாவத்தைத் தரும்) என்பதிலிருந்து நாம் ஒருவருக்கு உபகாரம் செய்து அவரைத் திருப்திப்படுத்துவதற்காக சாஸ்திரத்தில் தடுக்கப்பட்ட செயல்களைச் செய்யக் கூடாது.

உதாரணத்திற்கு இன்னொருவனுடைய மனைவிக்குத் திருப்தி உண்டாகும் என்பதற்காக அவளுடன் ஒருவன் சம்பந்தம் வைத்துக் கொண்டால் இச்செயலை நாஸ்திகர்களும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

ஏனென்றால் ஓரிடத்தில்,

'க்ரோசதோ ஹ்ருதயேனாபி பரதாராபிமர்சினம்'

(அரைமனதுடன்கூட அடுத்தவனின் மனைவியோடு சம்பந்தம் வைத்துக்கொள்ளக்கூடாது)

என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே பரோபகாரம் செய்தால் புண்யம் ஏற்படும் என்ற விஷயம், சாஸ்திரத்தில் அனுமதிக்கப்பட்ட செயல்களுக்கு மட்டும்தான் பொருந்தும்.

அடுத்ததாகச் சொல்லப்பட்டுள்ள சாமான்ய தர்மம் ஸத்யம் பேசுதல் என்பதாகும். இதுவும் எல்லோராலும் அனுஸரிக்கப்படவேண்டிய தர்மம். ஸத்யம் பேசுகையில் ஒரு விஷயத்தை நாம் கவனிக்கவேண்டும்.

வேறு ஊரிலிருந்த கணவன் 'மாரடைப்பினால்' இறந்துவிட்டான் என்ற விஷயத்தைக் கேட்ட அவன் மனைவி அவளும் 'ஹார்ட்-அட்டாக்' வந்து இறந்துவிட்டாள். செய்தியை இந்தப் பெண்ணுக்குக் கூறிய மனிதர் உண்மை கூறுவதாக நினைத்துக் கொண்டு இந்த அனர்த்தத்திற்குக் காரணமாகிவிட்டார்.

ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்ய மப்ரியம் |
ப்ரியம் ச நான்ருதம் ப்ரூயாத் ஏஷதர்ம : ஸநாதன : ||

என்ற ச்லோகத்தில் நாம் ஸத்யத்தை எவ்வாறு பேச வேண்டும் என்பதற்கு முறைகள் கொடுக்கப்பட்டுள்ளன.

"ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்"

நாம் ஸத்யம் சொல்லி யாரையாவது ஆபத்தில் மாட்டுவதாயிருந்தால் அந்த ஸத்யம் பிரயோஜனப்படாது. கேட்பவன் மனதில் விஷயத்தைத் தாங்கிக் கொள்ளும் பக்குவம் வந்தவுடன்தான் நாம், அவ்விஷயத்தைச் சொல்ல வேண்டும். ஆகவே பிறருக்கு கெடுதல் செய்யும் உண்மையைச் சொல்வதைக் காட்டிலும் மௌனமாக இருத்தலே மேலாகும்.

"ப்ரியம் ச நான்ருதம் பூயாத்"

ஒருவனை சந்தோஷப்படுத்துவதற்காகவே அவனிடம் 'உனக்கு 2 லட்சம் லாட்டரிச் சீட்டில் பரிசு விழுந்திருக்கிறது' என்று சொல்லிய பிறகு உண்மையில் அவனுக்குப் பரிசு விழவில்லையென்றால் அவன் நிச்சயமாக ஏமாற்றமுறுவான். ஆகவே இனிமையாய் இருக்கிறது என்பதற்காகப் பொய் பேசக்கூடாது.

இவ்வாறு 'ஸத்யம் பேசுதல்' என்பது ஸாமான்ய தர்மம் ஆனாலும் அதை எப்படியெல்லாம் பேசவேண்டும் என்பதற்கும் நம் தர்ம சாஸ்திரங்கள் விசேஷணங்களைக் கூறியிருக்கின்றன.

(அடுத்ததாகக் கூறப்பட்டுள்ள ஸாமன்ய தர்மம் அஸ்தேயம் என்பதாகும். பிறர் பொருளைத் திருடாமை என்ற தர்மமே அது. மனதால் ஒருவனுடைய பொருளைத் திருட நினைத்தலும் தவறு. இந்த தர்மமும் எல்லோராலும் அனுசரிக்கப்பட வேண்டிய ஒன்று).

அடுத்தது 'சௌசம்'

மனிதனுக்கு முக்கியமாக இருக்க வேண்டியது 'தூய்மை' என்பது. 'ம்ருஜ்ஜலாப்யாம் பஹி: சௌசம்' (மண், தண்ணீர் முதலானவற்ருல் உண்டாவது புறத் தூய்மை) என்று நம் முன்னேர்கள் கூறிய ரீதியில் அனைவரும் குளித்து, பின் தோய்த்த ஆடைகளையே அணிய வேண்டும். ஆனுல் வட தேசத்தில் இருப்பவர்களுக்கு அதிகக் குளிர் காரணமாக அங்கு வீட்டில் இருக்கும்போதுகூட கால்வரை ஆடை அணிந்திருக்க வேண்டிவரும். காலிற்கும் காலணி அணிய வேண்டி வரும். இங்கிருந்து வடதேசம் செல்பவர்களுக்கு அது வியப்பாக இருக்கலாம் ஆனுல் அங்கு அவ்வாறிருப்பது மிகத் தேவையாகிறது. அவர்களுக்கு அதிகக் குளிர் காரணமாக தினமும் குளிப்பதே மிகவும் கஷ்டமான ஒரு செயல். ஒருவர் வேடிக்கையாக 'தக்ஷிண் மே ஆசார் உத்தர் மே விசார்' (தென்னுட்டில் ஆசாரங்களோடு இருக்க முடியும். வடநாட்டில் விசாரம் செய்வது முடியும்) என்று கூறியிருக்கிருர்.

'நரசிர: கபாலம் சுசி ப்ராண்யங்கத்வாத் சங்கவத்' என்று தர்க்க சாஸ்திரத்தில் ஒரு பூர்வபக்ஷத்தை (எதிர்ப்பைக்) கிளப்புகின்றனர். அதாவது ஒரு ப்ராணியின் அங்கமான சங்கை நாம் பூஜைக்குப் பயன்படுத்துகிருேம். ஏனென்ருல் அதை 'சுசி' (புனிதம்) என்று எண்ணுகிருேம். மண்டை ஓடும் ப்ராணியின் ஓர் அங்கம்தானே. ஆகவே இதையும் 'சுசி' என்று ஏன் கருதக் கூடாது என்பதே அந்த எதிர்ப்பு. இது சரியில்லை என்று காட்ட 'சாஸ்த்ர நிஷித்தத் வாத்' (சாஸ்திரத்தில் தடுக்கப்பட்டிருப்பதால்—) என்ற பதிலையும் அதிலேயே கொடுத்துள்ளனர், ஆதலால் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட வாறு இருக்கும் சுசிதான் உண்மையான சுசி.

எந்த முறையிலெல்லாம் நாம் சௌசத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறதோ அம் முறையில் நாம் சௌசத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

கடைசியாகக் கூறப்பட்டுள்ளது இந்திரிய நிக்ரஹம். (அதாவது புலன்களை அடக்குதல். முன்பே இந்திரிய நிக்ரஹம் யார் யாருக்கு எப்படியெல்லாம் இருக்கவேண்டும் என்பதைப் பற்றிக் கூறப்பட்டது).

'ஏதம்ஸாமாஸிகம் தர்மம் சாதுர்வர்ண்யே ஃப்ரவீன் மனு:'

இவ்வாறு மேற்கூறப்பட்ட தர்மங்கள் நான்கும் எல்லோருக்கும் சமமாக இருந்தாலும் இதிலும் சிற்சில விஷயங்களைக் கவனிக்க வேண்டியிருக்கிறது எனத் தெரிந்து கொண்டோம்.

'தர்மஸ்ய ஸூக்ஷ்மா கதி:' என்று கூறப்பட்டது போல தர்மம் என்பது மிகவும் ஸூக்ஷ்மமாக இருக்கிறது. எல்லோருக்கும் பொதுவான தர்மங்களும் அது தவிர சிலர் மட்டும் பின்பற்ற வேண்டிய விசேஷ தர்மங்களும் உண்டு இன்னொருவனுடைய தர்மம் பின்பற்றுவதற்கு எளிதாக இருக்கலாம். அதற்காக நாம் இன்னொருவனின் தர்மத்தைப் பின்பற்றச் சென்றுவிடக்கூடாது. புடவைகள் பல வண்ணங்களில் இருக்கின்றன என்பதற்காக ஆண்களும் புடவை கட்ட ஆரம்பித்தால் அது வேடிக்கையாக அல்லவா இருக்கும்? ஆகவே அவனவன் தனது தர்மங்களைப் பின்பற்றுவதிலேயே கவனம் செலுத்த வேண்டும். தர்ம விஷயத்தில் நாமாக எதையும் மாற்றம் செய்ய நமக்கு அதிகாரம் இல்லை. அதனால்தான்

ஞாத்வா சாஸ்த்ர விதானோக்தம்கர்ம கர்துமிஹார்ஹஸி

என்று கீதையில் பகவான் கூறியுள்ளார். ஆகவே தர்ம சாஸ்திரங்களில் பொதுவாக உள்ள தர்மங்கள் எவை, விசேஷமாகச் சிலர் செய்ய வேண்டிய தர்மங்கள் எவை என்பதைத் தெரிந்து கொண்டு அதுபோல் நடந்து கொள்ள வேண்டும்.

இதை விடுத்து நாமாகவே தர்மங்களைத் தீர்மானம் செய்துவிடலாம் என்றால், வாசஸ்பதி மிச்ரர்

யத்னேனுனுமிதோப்யர்த்த: குசலேனுனுமாத்ருபி: ।
அபியுக்ததரை: அன்யை: அன்யதைவோபபாத்யதே॥

என்று கூறிய ரீதியில் இன்று புத்திசாலிகள் பிரயத்தினப் பட்டு எதைத் தீர்மானம் செய்கிறுர்களோ, இவர்களையும் விடப் புத்திசாலிகள் இதை ஒதுக்கி விட்டு வேறென்றைத் தீர்மானம் செய்வார்கள். நாம் அன்ருட வாழ்க்கையிலேயே பார்க்கலாம்.

ஒரு புத்திசாலியான வக்கீல் நம்மிடமிருந்து ஒரு கேஸை வாங்கிக் கொண்டு நன்கு வாதாடினுர். அதன் காரணமாக நாம் வென்று விட்டோம். ஆனுல் எதிர்க்கட்சிக்காரன் அத்துடன் விடவில்லை. இன்னும் புத்திசாலியாயுள்ள ஒரு வக்கீலிடம் கேஸைக் கொடுத்து சுப்ரீம் கோர்ட்டிலேயே போய் வாதாடச் செய்தான். கடைசியில் எதிரி வென்றுவிட்டான்.

ஆகவே நாம் சிலவற்றைத் தர்மம் என்று தீர்மானம் செய் தால் நமக்குப் பின் வருபவர்கள் அன்றைய நிலைக்கு ' அது சரி யாக இருந்தது. இப்போது அப்படியில்லை ' என்று கூறிவிடு வார்கள். தர்ம சாஸ்திரங்கள் முதலில் மனிதர்களால் உப தேசிக்கப்படவில்லை. வேதம் என்பது சுப்ரீம் கோர்ட் போன்று உள்ளது. அங்கு தீர்மானம் செய்யப்படுவதற்கு மேல் வேறு எந்த நீதி மன்றமும் கிடையாது.

ஆகவே தர்மங்களைத் தீர்மானம் செய்வதற்கு வேதத்தில் தான் முதலில் பார்க்க வேண்டும். ( அதில் விளக்கப்படாத விஷ யங்கள் ஸ்ம்ருதிகளில் (வேதத்தைப் பின்பற்றி முனிவர்களால் எழுதப்பட்டவை) இடம் பெறலாம். ஆகவே அப்போது அங்கு பார்க்கவேண்டும். ஆனுல் வேதத்திற்கு எதிரிடையாக எந்த தர்மமும் ஸ்ம்ருதிகளில் கூறப்பட்டிருக்காது. அப்படிக் கூறப் பட்டால் என்ன செய்வது என்று யாராவது கேட்டால் நாம் அந்த ஸ்ம்ருதி கூறுவதுபோல் நடக்க வேண்டாம். மூன்று

வதாக, தர்மத்தை தீர்மானம் செய்ய நாம் ஆன்றோர்கள் என்னமாதிரி நடந்து கொண்டார்கள் என்பதைப் பார்த்துப் பின்பற்றலாம். அடுத்ததாகக் கூறப்பட்டுள்ளது நமது மனச் சாட்சி நமது மனச்சாட்சி மெய்யாகக் கூறுவதை நாம் தர்மம் என்று எடுத்துக் கொள்ளலாம். இங்கு ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். வேதத்தைப் பார்த்த பின்னரும், நமக்கு, ஏதாவது மேலும் விளக்கம் தேவையாயிருந்தால்தான் அடுத்த தாகக் 'கூறப்பட்டுள்ள மூன்று பிரமாணங்களையும் வரிசையாக நாடவேண்டும். வேதத்திற்கு எதிராக உள்ள எந்த தர்மமும் தர்மம் ஆகாது).

எந்த சமயத்திலும் நாம், நம்மால் இயன்றவரை தர்மத்தை அனுஸரிக்க வேண்டும். புகைவண்டியில் பிரயாணம் செய்யும்போது, வண்டி எங்கும் நிற்காமல் சென்று கொண் டிருந்தால் அப்போது மானஸீகமாய் ஸந்தியாவந்தனம் செய்து கொள்ளலாம். ஆனால், வீட்டில் இருக்கும்போதும் மானஸீகமாகச் செய்தால் என்ன என்று கேட்டால் அது தவறு. ஆகவே எல்லாக் காலங்களுக்கும் ஏற்றவாறுதான் தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. கலியுகத்திற்கு ஏற்ற தர்மங்கள் இவையெல்லாம் இல்லை என்று நாம் கூற முடியாது.

ஆகவே இந்த தர்மங்களையெல்லாம் நாம் நடைமுறையில் பின்பற்றி ச்ரேயஸ் அடைய வேண்டும்.

ஹர நம: பார்வதீ பதயே ! ஹர ஹர மஹாதேவ !!

ஜானகீகாந்தஸ்மரணம் ! ஜய ஜய ராம ராம !!

## எமது வெளியீடுகளில் சில.



| மகாத்மா காந்தி நூல்கள் | ரூ. பை |
|---|---|
| பதினேழு தொகுப்புக்கள் | |
| தொகுப்பு ஒவ்வொன்றின் விலை | 7—50 |
| தமிழ் நாட்டில் காந்தி (அ. இராமசாமி) | 18—00 |
| காந்தி வழிக் கதைகள் (சாதா) | 7—50 |
| காந்தி வழிக் கதைகள் (காலிகோ) | 10—00 |

*கிடைக்குமிடங்கள்*

**சர்வோதய இலக்கிய பண்ணை**

**மேல வெளி வீதி, மதுரை-625001.**



**சர்வோதய சங்க கதர் வஸ்திராலயங்கள்**



**தமிழ்நாடு காந்தி நினைவு நிதி**

**தல்லாகுளம், மதுரை-625002.**